### V.—PRESENTATION OF THE REPORT OF THE COMMITTEE ON ESTIMATES ON FORESTS.

Mr. SPEAKER : The hon. Member, Sri Subramania Gounder, will now present the Report of the Committee on Estimates.

Sri K. S. SUBRAMANIA GOUNDER : Mr. Speaker, Sir, I, the Chairman of the Committee on Estimates, having been authorized by the Committee to present the Report on its behalf, present the Report [a] of the Committee on Estimates on Forests.

### VI.—GOVERNMENT BILL.

THE MADRAS PLANTATIONS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1958 (L.A. BILL NO. 16 OF 1958).

Mr. SPEAKER : Yesterday we were having discussion on the Plantations Agricultural Income-Tax (Amendment) Bill and the hon. Member, Sri Vedarathnam had already taken eight minutes yesterday. If he wants to continue his speech, he can speak for another five minutes only. Other hon. Members also except the Leaders of Parties will be given only five minutes each.

Sri A. VEDARATHNAM : கனம் சபாநாயகர் அவர்களே, நேற்று இந்த மசோதாவின் மீது பேசியபோது சொல்லிய விஷயங்களைத் தவிர, சில முக்கியமான விஷயங்களை மட்டும் எனக்குக் கொடுக்கப் பட்டிருக்கும் அவகாசத்தில் சொல்லி முடிக்க விரும்புகிறேன்.

இந்த மசோதாவின் 6-வது பிரிவில் விஞ்ஞான ஆராய்ச்சிக்காக யாதொரு பல்கலைக்கழகம், கல்லூரி அல்லது இதர ஸ்தாபனத்திற்குக் கொடுக்கப்பட்ட யாதொரு தொகைக்கும் விதி விலக்கு அளிக்கப்படுவதாக குறிப்பிட்டிருக்கிறார்கள். இது விவசாயிகள் சம்பந்தமான வருமான வரிச் சட்டம். கிராமத்தில் இருப்பவர்கள் இவர்கள். கிராமப் பள்ளிகளுக்கு நன்கொடை கொடுத்தால், கிராமப் புறங்களிலுள்ள ஆரம்பப் பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள் முதலியவைகளுக்கு நன்கொடை கொடுத்தால், அதற்கும் விதி விலக்கு அளிக்கவேண்டும். அனாதை விடுதிகள், ஏழை மாணவர் விடுதிகள், தமிழ் கல்லூரிகள், வடமொழி பாடசாலைகள், தேசீயப் பள்ளிகள், இவைகள் எதற்காகிலும் நன்கொடை கொடுக்க முன் வந்தாலும், அதற்கும் விதி விலக்கு அளிக்கவேண்டும். கல்லூரி, அல்லது பல்கலைக்கழகம் என்றிருப்பது போதாது. நம் நாட்டிலே லட்சக் கணக்கான மக்கள் படிப்பில்லாதவர்களாக இருப்பதால், அவர்களுக்குப் பயன்படக் கூடிய இந்தப் பள்ளிகளுக்குக் கொடுக்கும் நன்கொடைக்கும் விதி விலக்கு கொடுக்க முன் வர வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். அதே சமயத்தில் 11-வது கிளாஸ் 2 (பி) பிரிவில் "தமது ஆயுளை இன்ஷூர் செய்வதற்காக அல்லது தமது மனைவி, கணவன், தம்மை நம்பியிருக்கும் மகன் ஆயுளை இன்ஷூர் செய்வதற்காகவும்" என்று இருக்கிறது. இதற்கெல்லாம் விதி விலக்குக் கொடுக்கப் பட்டிருக்கிறது. பெண்கள் முன்னேற்றத்துக்காகப் பாடுபடுகிற நமது அரசாங்கம் என் இந்தப் பிரிவிலே மகளையும் சேர்த்துக்கொள்ளத் தவறி விட்டது என்று எனக்குப் புரியவில்லை. அதிலும் குறிப்பாக, விவாக மாகாத பெண்களையும், விதைவைகளாக இருப்பவர்களையும் பராமரிக்க வேண்டியவர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய இன்ஷூர் கட்டணத்திற்கும் விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன். இவற்றையெல்லாம் அரசாங்கமே "சரி" என்று ஏற்றுக்கொள்வார்களேயானால், அவர்களே அதற்கான திருத்தம் கொண்டு வந்து மாற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

---

[a] Laid on the table of the House.